**மின்னூல் வெளியீடு :**

**http://FreeTamilEbooks.com**



பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/avanum_naanum

அட்டைப்படம் - u2write - s.sumi270184@gmail.com

மின்னூலாக்கம் - ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

# பொருளடக்கம்

# அவனும் நானும்

**ஆசிரியர்**

**சுமிதா கபிலன்**

மின்னூல் வெளியீடு : Kaniyam Foundation



Ocr, Proof Reading : ஐஸ்வர்யா லெனின்

aishushanmugam09@gmail.com

# என்னுரை

இருபது தொடங்கி அறுபது வரை காதலை கடந்து செல்லாதவர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். மனிதாகள் மட்டுமன்றி விலங்குகள், பறவைகள் என்று அனைத்து உயிர்களுமே காதலால் உருவானவையே. காதலின்றி சுழலாது உலகு.

வீரத்துக்கு பெய் போன பிரபாகரன் என்ற மாவீரன் பிறந்த நாடாம் ஈழத்தில் யாழ்பாணம் என்ற ஊரில் பிறப்பெடுத்து போரின் வெப்ப கனலால் புலம் பெயாந்து சிறு வயதிலேயே இலண்டனில் குடி. புகுந்தோம். தற்போது ஒரு தனியார் நிறுவனத்தில் பணியாற்றி வருகின்றேன்.

சிறு வயது முதல் மனதிற்கு தோன்றுவதை கிறுக்குவதுண்டு, என் கணவரை சந்தித்து அவர் மேல் காதல் கொண்ட நாள் முதல்

கிறுக்கிய அவருக்கான சில காதல் துளிகளை கவிதை நூலாக்க ஊலகமவ்த்லாம் அதன் அடிப்படையில் பிறந்தது தான் “அவனும் நானும்” எனும் என் முதல் கவிதை நூல்.

என்னை உயிராய் தாங்கி இந்த நூல் உருவாவதற்கு காரணியாய் இருந்த என் காதல் கணவருக்கும், தன் கவிதைகளால் என் மனம் கவர்ந்து எனக்குள்ளும் ஆர்வத்தை தூண்டி என் எழுத்துக்களுக்கு உயிர் கொடுத்த என்னவனின் தந்தையாம் என் மாமாவுக்கும், என் முதல் கவிதைக் குழந்தையை பிரசவிக்க உதவிய அனைத்து நல உள்ளங்களுக்கும், 16 அச்சக உரிமையாளர்களுக்கும், ஊழியாகளுக்கும் என் மனமாரந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

சுமிதா கபிலன்

## 1.

பஞ்சு போல்
பறக்கிறது மனது
அருகில் என்னவன்.

# 2.

பாலைவனம் போன்றிருந்த வாழ்க்கையை

சோலை வனமாக்கியன்

என் சொந்தக்காரன்.

# 3.

திமிறிய என்னை இழுத்து
இறுக்கமாய் அணைத்து கொள்கிறாய்

மெல்ல சாகிறது என் கோபங்கள்.

# 4.

**ஓ காதல் இது தானோ...!**

கடையில் வாங்கிய புது பேனாவும் நானறியாமல்

உன் பெயரை தான் கிறுக்குகிறது..

ஓ இது தான் காதலோ...!

## 5.

நீ நெற்றியில் பதிக்கும் முத்தத்தில்

என் அக வலிகள் அனைத்தும்

அகால மரணமடை கின்றன,

ஓ காதல் இது தானோ...

# 6.

ராட்சசி என்று தான் அழைக்கிறான்

ஆனாலும் தேவதையாய் உணரச் செய்கிறான்

ஓ காதல் இது தானோ...!

# 7.

என் ஊடல்களை எல்லாம்

உன் இதழ் கொண்டு கூடலாக்குகிறாய்

பனியாய் உருகுகிறேன் நான்.

# 8.

காதல் கொண்டு
காமம் சேர்த்தோம்
கருவானாள் நம்மவள்.

# 9.

காமம் தீர்ந்த பின்பும் என் தோளணைத்து
நெற்றியில் உன் இதழ் பதித்து விடு போதும்
மீண்டும் ஒரு முறை உன்னை காதல் செய்ய.

# 10.

உன்னுள் நானும் என்னுள் நீயுமாய் நட்போடு

பயணத்தை தொடங்கினோம்

அழகாய் கை கோர்த்து கொண்டது

நம் காதல்.

# 11.

சுடுகாட்டிலும் சுகமாய் பயணிக்கிறேன்,

என் கைகளை இறுக்கி பிடித்த படி

வழித்துணையாய் நீ.

# 12.

நேற்று வரை ஜென்மங்களில் நம்பிக்கையற்றவள் நான்

இன்று இல்லாத கடவுள்களை எல்லாம்

துணைக்கழைக்கின்றேன் ஏழேழு ஜென்மத்திலும் அவனே

என்னவனாக வேண்டுமென்று.

# 13.

குளிர்கிறது பாப்பா என்கிறேன் நான்

உன்னையே கம்பளியாக்கி

என்னை இறுக்க போர்த்திக் கொள்கிறாய் நீ.

# 14.

கொட்டும் மழை
மிதமான சூட்டில்
குவளையில் தேநீர்
அருகில் காதலுடன்
என்னை பருகியபடி நீ
வேறென்ன வேண்டும்
வாழ்க்கையை ரசிக்க.

# 15.

சிறு குழந்தையை போல் இரு கரங்களையும்
உன்னை நோக்கி விரிக்கிறேன்
ஓடி வந்து அணைத்துக் கொள்கிறாய்
புதைந்து போகிறேன் உனக்குள்.

# 16.

காமம் கடந்தும் காதல் செய்யும்
வித்தை அறிந்தவன் அவன்...

## 17.

கோபப்பட்டு கத்தி விடுகிறான்
சில நொடிகளில் கொஞ்சல்களை
அள்ளி தெளிக்கிறான்
கோபப்படவும் மறந்தவளாய்
சிணுங்கியபடி நான்.

# 18.

சிடுமூஞ்சி என்று பெயர் எடுத்தவன் தான்,

சிறு குழந்தையாகி

அடங்கி போகிறான் எனக்குள்.

# 19.

நீ தான் எனக்கு பேரழகி என்கிறாய் நீ,

தினமும் கண்ணாடி பார்க்கிறேன் தான்

என்கிறேன் நான் செல்ல கோபத்துடன்,

என் கண்ணுக்குள் பார் என்கிறாய்,

காதலில் கரைந்து போய் நான்.

# 20.

உயிர் கொடுத்தாய் நீ
உருவம் கொடுத்தேன் நான்
உயிர் மூச்சு கொடுத்தோம் நாம்
உருவானது நம் காதல் குழந்தை.

# 21.

என் கைபேசி மேல் கொஞ்சம்

பொறாமை தான் எனக்கு,

உன் முத்தங்களை எல்லாம்

திருடிக் கொண்டு வெறும்

சத்தங்களை மட்டுமே எனக்களிக்கிறதே.

# 22.

உன் கோப கனவில் வெந்து சாம்பலானாலும்

மீண்டும் மீண்டும் உயிர்த்தெழுந்து

உன்னை காதலிக்கும் பீனிக்ஸ் பறவையாய் நான்.

# 23.

தூக்கம் கண்ணை சொக்க
தூங்க முனைகிறேன்,
தட்டி எழுப்புகிறது
உன் நினைவுகள்.

# 24.

உன் முத்தத்தை பருகி

பசியாறுகின்றது என் காதல்.

# 25.

தவமேதும் புரியவில்லையே நான்,

வரமாய் எப்படி நீ வந்தாய்?

# 26.

நானும் உன் தாயே..

பத்து மாதங்கள் தன் உதிரத்தில் வைத்து

சுமந்து பெற்றவள் அம்மா எனில்,

உன் உதிரத்தை எனக்குள் பத்து மாதங்கள்

பத்திரமாய் சுமந்து பெற்ற நானும் உன் தாயே.

# 27.

முட்களும் கற்களும் நிறைந்த என் வாழ்க்கைப்

பயணம்,

துணையாய் நீ வந்தாய் காதலுடன்

மலர் பாதை அமைக்க.

## 28.

இப்பொழுதெல்லாம் எந்தவொரு இடரிலும்

சிரித்துக் கொண்டே இருக்கிறேன்.

இதமாய் இதயத்தை வருடுகிறான் என்னவன்.

# 29.

தமிழில் உள்ள அத்தனை வார்த்தைகளும் போட்டி

யிடுகின்றன, உனக்காய் நான் எழுதும் கவிதைகளில்

யார் முதலில் இடம் பிடிப்பதென்று.

# 30.

என் கோபங்கள் அனைத்தையும் நொடிப் பொழுதில்

கொஞ்சலாய் மாற்றும் வித்தை அறிந்த

மாயக்காரன் அவன்.

# 31.

ரோசாப்பூ மாலை தோளில் கணக்க உன்னை

ஒட்டி உரசியபடி உன்னருகே

மணப் பெண் கோலத்தில் நான்,

# 32.

என் அனைத்தும் அவனாய்

அன்பை கொட்டும் வேளையில் அன்னையாய்,

அறிவுரை சொல்லும் வேளையில் தந்தையாய்,

காதலை உணர்த்தும் வேளையில் காதலனாய்,

காமத்தை பகிரும் வேளையில் கணவனாய்,

சண்டையிடும் வேளையில் எதிரியாய்,

கொஞ்சும் வேளையில் குழந்தையாய்,

என் அனைத்துமானவனாய் அவன்.

# 33.

பகுத்தறிவு அனைத்தும் தோற்று போனது,

உணவருந்தும் வேளையில் புரையேறியதும்

நீதான் என்னை நினைக்கிறாய் என்று

எண்ணி சிரித்து கொண்ட போது.

# 34.

பழக பழக பாலும் புளிக்குமாம்,

நாட்கள் செல்ல செல்ல காதலும் கசக்குமாம்,

வருடங்கள் கடந்தும் தேனைப் போன்று

தித்திக்கின்றாயே எப்படி...?

# 35.

காதல் எனும் ஏட்டில்

காமம் என்னும் குரிகை கொண்டு

வரைந்தாய் என் வயிற்றில்

அழகான உன் உயிர் ஓவியத்தை.

# 36.

நன்கு விடிந்த பின்னும் தூங்குகுவதைப் போன்று
பாவனை செய்கிறேன்,
என் கழுத்தில் உன் முகம் புதைத்து
என் காது மடல்களில் உன் மூச்சு காற்றின்
வெப்பம் படர
மெல்ல இதழ்களால் கன்னம் வருடி
”விடிஞ்சிருச்சு எந்திரி பாப்பா” என்ற
உன் சினுங்கலை கேட்பதற்காக.

# 37.

அண்கள் மோசமானவர்கள் என்று (போலிப்)

பெண்ணியக் கொடி பிடித்திருப்பேன் தான் நானும்

உன்னை பாராமல் இருந்திருந்தால்.

# 38.

கண்ணே மணியே என்று காதல் வசனம்

பேசியதில்லை அவன், இருந்தும் ஒவ்வொரு

நொடியும் உணரச் செய்கின்றான்

நான் தான் அவனின் அனைத்துமானவள் என்று.

# 39.

பெரியாரும் பெரியோரும்
ஆசிர்வதிக்க
ஆனேன் என் அவனின்
திருமதியாய்.
சுயமரியாதை திருமணம்..!

# 40.

## காதல் இனிது

பேருந்து பயணம்

அருகில் என் கைகளை

இறுக்க கோர்த்தபடி அவன்

காதுக்குள் காதல் இசைத்து கொண்டிருந்தார்

இளையராஜா, காதலோடு வாழ்தல் இனிது.

# 41.

தொட்டா சினுங்கியாய் தொட்டதெற்கெல்லாம்

முகம் சுருக்குபவள் நான்,

என் குறைகளை எல்லாம் காதலுடன் ஏற்கிறான்.

காதலுடன் வாழ்தல் இனிது.

# 42.

"நான் நல்லா தான் சமைச்சேன் அது நல்லா

வல்ல" என்கிறேன் பாவமாய் முகத்தை வைத்து

சிறுமியைப் போல்,

சிரித்தபடி யே உண்ணுகின்றாய்

அந்த உணவு இப்போது தேவாமிர்தமாய்.

காதல் இனிது.

# 43.

புண் பட்ட என் மனதிற்கு பூசினான்

அவன் காதலை மருந்தாய்.

காதல் இனிது.

# 44.

கை தட்டல் ஓசையே கெட்டிமேளமாய் ஒலிக்க

என் கழுத்தில் மூன்று முடிச்சிடுகின்றாய்,

பல வருட கனவு நனவாகிய சந்தோசம் கண்களில்

கண்ணீராய் வழிந்தோடுகின்றது,

எதையோ சாதித்து விடடபெருமிதம் உன்

கண்களில், அழகாய் சிரித்தபடி என் கரத்தை

இறுக்க பற்றிக்கொள்கிறாய்,

காதல் இனிது.

# 45.

பழகிய நாள் தொடங்கி இன்று வரையிலும்

”பாப்பா”

என்பதையன்றி வேறேதும் அழைத்தானில்லை

என்னை,

என் தாயுமானவன் அவன்.

# 46.

அவன் மேல் கொண்ட காதலை சொல்ல வார்த்தை

தேடி தோற்று ”அவன் என் உயிரானவன்”

என்று இரண்டு வரிக்குள் அடக்கி விட்டேன்

நான் அவன் மேல் கொண்ட நேசத்தை.

# 47.

அவன் நகர்வுக்கு ஏற்ப நகரும்
அவன் நிழல் போல வாழ
ஆசை கொண்ட மனதிற்கு
எப்படி சொல்லி புரிய வைப்பேன்
நீ தரையில் விழும் அவன் நிழல் அல்ல
அவனின் உயிராய் அவனுள் வாழும்
அவன் இதயமென்று.

# 48.

அவனால் நேசிக்கப் படுகிறேன் என்பதைவிட

போதை வேறேதும் உளதோ,

காதல் போதை.

# 49.

பல வலிகளை கடந்தும் வலிமையாக தொடர்கிறது

நாம் கொண்ட காதல்,

உண்மை காதலுக்கு தொலைவென்பது

ஒரு பொருட்டல்லவே.

# 50.

என் துன்பங்களுக்கு மருந்தோ

என் வலிகளுக்கு ஒத்தடமோ நான் கேட்கவில்லை,

துன்பத்தில் துவழும் போதெல்லாம்

என் தோளணைத்து அருகிலிரு போதும்.

# 51.

தேவதைகள் பற்றி கதைகளில் மட்டுமே படித்ததுண்டு...

உன்னை காணும் வரை...

என் வாழ்க்கையை வசந்தமாக்கிய

என் ஆண் தேவதை நீ...

# 52.

இறுக மூடிய விழிகளுக்குள்
இதமாய் சிரிக்கிறாய்
உறங்கவும் முடியவில்லை
உன் நினைவுகள் உறங்க விடுவதுமில்லை.

# 53.

விடையில்லா வினாவாய் சுற்றி திரிந்தவள்

எனக்கு விடையளித்தாய்

உன் திருமதியாக்கி.

# 54.

துரரங்கள் நம்மை பிரித்திருந்தாலும்

நீ என்னை நினைத்தபடியே தான் இருக்கிறாய்

என்பதை நான் அறியத் தான்

இன்றும் நான் சாப்பிடும் போது விக்கியதோ?

# 55.

முகத்தை தொலைத்தவளுக்கு
முகவரியானவன் அவன்.

# 56.

**“பாப்பா”**

சண்டைகோழியாய்
முரண்டு பிடிக்கும் என் அத்தனை திமிரும் தவிடு
பொடியாகுகிறது உன் ஒற்றை வார்த்தையில்,
”பாப்பா”

# 57.

என்னுடைய வலிகள், கோபங்கள், பிடிவாதங்கள்

அத்தனையையும் நொடிப்பொழுதில் சுக்கு நூறாய்

உடைத்தெறிந்து மனதை லேசாக்கி பட்டாம்பூச்சி

போல் மாற்றி பறக்கவிடும் வல்லமை அவனின்

அந்த ஒரு வார்த்தைக்கு உண்டு...

பாப்பா

# 58.

வாழ்ந்தாலும் இறந்தாலும்

இவள் அவனின் மனைவியாகவே.

என்றும் இணைந்தே பறப்போம் என்ற நம்பிக்கையுடன்

உன்னை சுற்றும் பட்டாம்பூச்சி இவள்.

## 59.

உன் உயிராய்

உன் தோழியாய்

உன் மனைவியாய்

உன் நிழலாய்

உன்னவளாய் வாழவே

இந்த மண்ணில் நான் பிறப்பெடுத்தேனோ?

# 60.

## அத்தை எனும் அம்மாவுக்கு

வேண்டும் வரம் ஒன்று தான்

என்னவனின் மனைவியாகிய எனக்கு என்னவனின்

அம்மாவே மழலையாகி மடி தவழ வேண்டும்

# 61.

வளர்ந்த ஒரு குழந்தையாய்,

என் தாயாய்,

உன்னை என் கண்ணின் கருமணியாய்,

கையில் வைத்து தாங்கவென

உன் மேல் காதலோடு நான் காத்திருக்க,

என்னை தாயாக்கி என் மகளாய்

என் மடி தவழ்ந்து என் வாழ்வை மலர செய்ய

நீ மலர் வளையம் தாங்கினாயா?

உன் மறு மகளாய் என் நேரங்களை

உன்னோடு களிக்க அசை கொண்டு காத்திருந்தேன்

யார் கண் பட்டதுவோ மீளா சுயிலில் அழ்ந்து விட்டாய்...

மீண்டும் என் காத்திருப்புகள் தொடர்கின்றன

என் மகளாய் நீ என் மடி தவமும் நாளுக்காய்...

மீண்டும் மீண்டு வந்து விடு

உன் சின்னவனோடு உனக்காய்

நானும் காத்திருப்பேன்...

# 62.

வள்ளுவனின் இரண்டடி திருக்குறளாய்

உதித்தவர்கள் நாம்

ஒரு வரி நீயும்

மறு வரி நானுமாய்.

# 63.

வெட்ட வெட்ட மீண்டும் மீண்டு உயரமாய் வளரும்

விருட்சம் போல சிறு சிறு ஊடல்கள் வந்தாலும்

மீண்டும் மீண்டு நம் காதல் விருட்சம்

வலிமையாக வளர்ந்து கொண்டே இருக்கிறது.

# 64.

என் கவிதை குழந்தைகள் அத்தனையும்

அவனால் அவனுக்கமாய் பிறந்தவையே.

# 65.

சிதறி விழுந்த என் கண்ணீர் துடைத்து

என்னை சிறை மீட்ட உனக்கு

என்ன நான் தர முடியும் என்னை தருவதையன்றி,

தந்து விட்டேன் என்னை முழுவதுமாய்.

# 66.

சூரியனிடம் வெளிச்சம் பெற்று பிரகாசிக்கும்

நிலவைப்போல

உன் காதலால் பிரகாசிக்கும் அழகிய

நிலவாய் இவள்.

# 67.

கோபத்தில் அவனுக்கு கொஞ்சமும் சளைத்தவள்

இல்லை நான்,

என் கோபங்கள் எரிச்சல்கள்

கடுமையான வார்த்தைகள் அனைத்தையும்

ஒரு சின்ன புன்சிரிப்போடு பெற்று கொண்டு

பதிலுக்கு காதலை மட்டும்

என் மேல் தெளித்து என்னை கடந்து செல்கிறான்

காதலுடன்...

# 68.

உன் இதழ்கள்

என் இதழ்களோடு

இணைந்து எழுதும்

கவிதைகளை விட

ஒரு அழகான கவிதை இ

ருக்க கூடுமோ

இவ்வுலகில். ?

# 69.

எனக்காக தான்

அத்தனையும் விட்டு கொடுத்தாய்

எனும் நினைப்பே உன் மீதான என் காதலை

இன்னும் பல மடங்கு வலிமையாக்குகிறது.

# 70.

பாரம் தாங்காமல்

என் மனச்சுமைகளை

இறக்கி வைக்கிறேன் உன் மேல்

சுமைதாங்கியாய் தாங்கி பிடித்து கொள்கிறாய்

என்னோடு என் சுமைகளையும்.

# 71.

அதீத காதலில்
சில பைத்தியக்கார தனங்களும்
உண்டென்று உணர்ந்தேன்,
நீ எனக்காய் வாங்கி கொடுத்த சாக்கிலேட்டை
தின்ற பின்பு அதன் உறையை
பத்திர படுத்தி வைத்த போது.

# 72.

என் தலையணைக்கு வாயிருந்தால்

சொல்லியிருக்கும்,

நீயென்று நினைத்து அதனை

அணைத்து ஏமாந்த தருணங்களை.

# 73.

சுகமாய் உடல் வருடும் தென்றல் காற்றைப் போல

வெள்ளந்தி சிரிப்பில் என் உள்ளம் வருடுகின்றாய்,

சுவாசிக்கவும் மறந்தவளாய் நான்.

# 74.

உன் நினைவு வரும்போதெல்லாம்

என் கைபேசியை அணைத்துக் கொள்கிறேன்,

கைபேசி முகப்பு படத்தில்

அழகாய் சிரித்தபடி நீ.

# 75.

கண்கள் பேசி கொள்வதும்
உதடுகள் சந்தித்து கொள்வதும்
நம் காதலில் மட்டுமே சாத்தியம்.

# 76.

நீ எப்போது

முத்தமிடுவாய் என்று தெரியவில்லை,

அதனால் எப்போதும் ஈரமாகவே வைத்திருக்கிறேன்

என் உதடுகளை.

# 77.

நான் உனக்கு யார்” என்று

அறியாதவனைப் போல் கேட்கின்றாய்.

அன்பை மழை போல் பொழிகின்றாயே

அதனால் உன்னை

என் தாயைப் போன்றவன் என்பதா?

துன்பங்கள் என்னை தீண்டாமல் காக்கின்றாயே

அதனால் உன்னை

என் தந்தையைப் போன்றவன் என்பதா?

என் நிழலைப் போல் தொடர்கின்றாயே அதனால்

நீயே நான்தான் என்பதா?

உன் மேலான என் சொந்தத்தை

வார்த்தைகளில் அடக்கிவிட முடியாமல்

மெல்ல சிரித்தபடி

”நீ என்னவன்” என்கிறேன்.

## 78.

அவனே நானாய்
நானே அவளாய்
இருவரும் ஒருவராகி
அவனுள் தொலைந்து
அவனுள் உருகி
அவனை பருகி
அவனுக்காய் வாழ்தல் அழகு.

# 79.

வேறென்ன வேண்டும்
பாதியில் விழித்தெழும் போதெல்லாம்

உன் கைச் சிறைக்குள்
என்னை அடைத்து,
உன் ஈர இதழ்களால்
என் முன் நெற்றியில்
ஒரு முத்திரை பதித்து விடு போதும்

மீண்டும் ஒரு நித்திரைக்கு
கண்கள் ஆயத்தமாக.

# 80.

”இன்றோடு நம் காதலுக்கு

வயது ஐந்து என்ன பரிசு தருவாய் எனக்கு” என்று

ஆர்வம்கொப்பளிக்க கேட்கிறேன்.

குறும்பாய் சிரித்தபடி

என்னை நெருங்கி வருகின்றாய்,

தன்னிச்சை செயலாய்

என் கால்கள் பின்னோக்கி நகர

என் தோள்களை பற்றி நிறுத்துகிறாய்.

என் கண்கள் வழியே உன்னை தேடுகின்றாய்,

நான் ஏதோ சொல்ல எத்தணிக்க

உன் ஒற்றை விரலால் என் உதட்டை மூடுகின்றாய்.

இமைக்கவும் மறந்து சிலையாய் நிற்கின்றேன் நான்,

சற்றும் எதிர்பாக்காத நேரத்தில் மெல்ல குனிந்து

என் உதடடை உன் உதட்டால் மூடி.

சுவைக்கின்றாய்,

மெல்ல விடுவித்த பின்

”இதை விட அழகான பரிசு

ஏதேனும் இருக்க முடியுமா?!”

என்கிறாய் நீ,

வெட்கத்தில் சிவந்து போய் நான்.

# 81.

”உனக்கு யாரை ரொம்ப பிடிக்கும்

”உன்னையா என்னையா?” என்கிறாய்

”என்னை தான் ரொம்ப பிடிக்கும்” என்கிறேன்

நான் குறும்பாய், எதிர்பார்த்த பதில் கிடைக்காத

அதிருப்தி உன் முகத்தில்

உனக்கு எப்படி புரிய வைப்பேன்

நானே நீயாய் மாறி போய் விட்ட உண்மையை.

# 82.

முதல் முறை
வானவில்லை ரசிக்கும்
சிறு குழந்தையாய்
மனம் ஆர்ப்பரிக்கின்றது
உன் விழிகள் என்னை
தீண்டும் போதெல்லாம்.

# 83.

## அவனும் நானும்

அவனும் நானும்
தமிழும் அழகும்
அவனும் நானும்
இதயமும் துடிப்பும்
அவனும் நானும்
இதழும் ஈரமும்
அவனும் நானும்
நீரும் தாகமும்
அவனும் நானும்
இரவும் நிலவும்
அவனும் நானும்
காதமும் முத்தமும்
அவனும் நானும்
மழையும் சாரலும்

# ஆசிரியர் குறிப்பு

புலிக்கொடி தாங்கிய ஈழத்தின் யாழ்பாண மண்ணை பிறப்பிடமாக கொண்டவர். போரெனும் கொடியவன் துரத்த இலண்டனில் சிறு வயதில் குடி புகுந்தார்.
புலிக்கொடி தாங்கிய தமிழகத்தின் சோழ மண்ணில் ஒருவரிடம் காதலாகி கரம் பற்ற தமிழ் நாட்டின் மருமகளானார். தற்போது இலண்டனில் தனியார் நிறுவனம் ஒன்றில் பணியாற்றி வருகிறார்.

## தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

## பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும்,

அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள்

யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

IFSC – UBIN0560618

Account Type : Current Account